3519

# சாக்தம்

## சக்தி வழிபாடு

896

5th Edition—Oct 78

ACC NO: 896
Q25

தொகுப்பாசிரியர் :

"செந்தில் துறவி"

விலை ரூ. 5-00

3-4



(Copy right)

சாஸ்தா பதிப்பகம்
Sastha Publications

4, கிழக்கு ரத வீதி, திருச்செந்தூர்.

37, போயஸ் சாலை, சென்னை-18.

Tel : 443793

1978 — 5.00

# பொருளடக்கம்



3-4







## எமது இதர நூல்கள்


| | | | |
|---|---|---|---|
| ஐயப்பனோடு ஐம்பதுநாள் | 5 00 | பராசக்தி படிவம் | 2 00 |
| முருகன் தலம் முப்பது | 2 00 | தர்மலோக தரிசனம் | 2 00 |
| காணுபத்யம் | 2 00 | கடல்காக்கும் கருணாநிதி | 200 |
| கௌமாரம் | 5 00 | அன்னைக்கு ஆயிரம் | 1 00 |
| சாக்தம் | 5 00 | மும்மணி நூல் [தேவி] | 0 50 |
| சைவம் | 2 00 | மும்மணி நூல் முருகன்] | 1 00 |
| வைஷ்ணவம் | 5 00 | மும்மணி நூல் [கணபதி] | 025 |
| சௌரம் | 2 00 | மும்மணி நூல் [சைவம்] | 0 50 |
| திருமால் திருப்பதிகள் | 2 00 | போற்றி நூற்றியெட்டு | 1 00 |
| ஐம்பெரு விழாக்கள் | 2 00 | கன்னியாகுமரி/ திருச்செந்தூர் [ஆங்கிலம்] | 0 35 |
| கேரளம் கண்டேன் | 2 00 | | |

# ச ம ர் ப் ப ண ம்

## A Mother's Interminable Patience

LONS-LE-SAUNIER (France), April 24.

A woman who has spent the past 22 years taking care of her comatose son was decorated here on Sunday with the French National Order of Merit.

Mrs. Marie Balay, whose 42-year-old son, Paul, went into a coma after being hit by a car after a village dance when he was 20 reaffirmed her oppostion to euthanasia and her conviction that her son will one day regain consciousness.—AFP.

(THE HINDU)

"நண்டு சிப்பி, வேய், கதலி நாச
முறும் காலம் கொண்ட கருவழிக்கும்"

நண்டு, தேள், சிப்பி, மூங்கில், வாழை, முதலிய ஜீவ ராசிகள் தன்னுயிரைக் கொடுத்துத் தான் தன் குழந்தைகளை (இனத்தை) உலகுக்கு அளிக்கின்றன சிற்றுயிரேயெனினும், தாய்மையின் பெருமையே பெருமை! சிந்தைக்கும் செயலுக்கும் அப்பாற்பட் டவையெல்லாம் நமக்கும் தெய்வீகமாகத் திகழ் கின்றன. இத்தகையகருணைக் கடலான

"தாய்க்குலத்துக்கு"

இந்நூல் சமர்ப்பணம் செய்யப்படுகிறது.

# ஸ்ரீ லலிதா
# ஷோடசாக்ஷரீ ஸ்தோத்ரம்
## (கும்மி)

ராஜராஜேச்வரி ராக்ஷஸக்னி ஸ்புட
ராகேந்து மண்டல ராஜன்முகி
ராஜ்யாதி பாராதி ஸ்ம்பத் ப்ரதாயினி
ராஜ்த்கிரீடினி பாலயமாம்.
—இந்துராஜத்கிரீடினி பாலயமாம். 1

கல்யாணரூப மனோஹராங்கி பஹு
கல்யம் ச ஸம்பவ தோஷஹரே
கல்யாணசைலதனுர்தர நாயிகே
கல்யாணமாக விதேஹிமம
—நித்ய கல்யாண மாக விதேஹிமம. 2

ஏணீ விசாலத்ருகம்புருஹே நிஜ
வேணீஸிதேதர குண்டலினி
வாணீவிலாஸ மஹாவர தாயினி
பாணீம் ப்ரதாயை வோத்தாராய மாம்.
—தவபாணீம் ப்ரதாயை வோத்தாரய மாம். 3

ஈசானபூர்வக ப்ரஹ்மமயி த்ருத
மீப்ஸிதாசேஷ மஹார்த்தப்ரதே
ஈசான வாமாங்கவாஸ மஹாரஸே
ஈஹாமிஹாசு விமோசய மே.
—பரமீஹாமிஹாசு விமோசய மே. 4

லக்ஷ்மீஸரஸ்வத்யுமாதியுதே ஸர்வ
லக்ஷண ப்ரோல்லமாஸிதாங் யுதே
லக்ஷகோட்யண்ட ஸஸூஹ விதாயினி
லக்ஷ்யார்த்த வஸ்து ப்ரதர்சய மே.
—லக்ஷ்யார்த்த வஸ்து ப்ரதர்சயமே. 5

ஹ்ரீம்கார பஞ்சரமத்யே சுகேச்வரி
ஹ்ரீம்காரஜாப ப்ரஸாத கரே
ஹ்ரீம் பதலக்ஷ்யார்த்த வஸ்து ஸ்வரூபிணி
ஹ்ரீரஸ்து மேஃஞத்மவஸ்து ஸுகே
—மஹாஹ்ரீரஸது மே஽ஞ த்மவஸ்து ஸுகே 6

ஹர்யப்ஜ ஜன்மத்ரித்ருக் ஜனனீ க்ஷித்ரி
ஹர்யச்வ பூர்வாமரார்ச்சிதாங்ரே
ஹர்ஷிணி ஸ்ரீஹரிஸோதரி சாம்பவி
ஹர்ஷப்ரதாபவ மே ஸததம்
—மஹாஹர்ஷப்ர தாமபவமே ஸததம். 7

ஸர்வசராசர ஜன்தூத்பவஸ்திதி
ஸம்ஹார கர்த்துஸ் ஸஹாயபூதே
ஸம்ஸாரசக்ர வரிப்ரமஞதிஷு
ஸாஹாய்ய மாசுவிதேஹி மம
—நித்ய ஸாஹாய்யமாசு விதேஹிமம. 8

கல்பலதோபம பாஹுயுகே மஹா
கல்பாந்தககாலாந்தக ஸாக்ஷிபூதே
கல்பித மித்யா ப்ரபஞ்ச விலாஸினி
கல்பயமே கதிமாத்ம மயீம்
—பரிகல்பய மேகதி மாத்மமயீம். 9

ஹவ்யவாஹாதி கலாமயி ஸஜ்ஜன
ஹர்ம்ய மஹாந்தோலி காதிப்ரதே
ஹஸ்தி கும்போன்னத வக்ஷோஜ சோபிதே
ஹத்யாதிபாப மிஹோச்சாடய
—ப்ரஹ்ம ஹத்யாதி பாபமிஹோச்சாடய. 10

லப்த மஹா பக்தியோகைக ஸாதனே
லக்ஷ்ய ஷடத்வாதிக்ராந்த ரூபே
லக்ஷ்மண பூர்வஜ முக்யப்ர பூஜிதே
லக்ஷ்மிகுருஷ்வ மாம் த்வம் க்ருபயா
—மஹாலக்ஷ்மிகுருஷ்வ மாம்க்ருபயா 11

ஹ்ரீ ம்கார ரங்கஸ்தலாந்தர் மஹாநடீ
ஹரீம்காரோத்யான ககே கினீசே
ஹ்ரீம் ஸரஸீ கலஹம்ஸினி சங்கரி
ஹ்ரீம் பதலக்ஷ் யார்த்த மாவிஷ்குரு
—தவ ஹ்ரீம்பதலக்ஷ்யார்த்த மாவிஷ்குரு. 12

ஸர்க்க ஸ்திதி ப்ரயாதி விநிர்முக்த
ஸச்சிதானந்தைக ப்ரம்ம மயி
ஸத்ஸம் ப்ரதாயாத்ம வித்யா ஸ்வரூபிணி
ஸத் வஸ்துத்யோதய மே ஸததம்
—ஹ்ருதிஸத்வஸ்துத்யோதய மே ஸததம் 13

கர்த்ருத்வ போக்த்ருத்வ தாமாதிதூரக
கூடஸ்த சைதன்ய ஸாக்ஷி பூதே
கல்பிதவஸ் த்வதிஷ்டான ஸ்வரூபிணி
மர்மாதி பந்தாத் விமோசய மம
—காமமர்மாதி பந்தாத் விமோசய மாம். 14

லம்போதர ப்ரஸவித்ரி ஷடானன
லப்தபய: பானவக்ஷோருஹே
லஜ்ஜான்விதே சிவசய்யா க்ருஹாங்கணே
லக்ஷ்யம் மமாஸ்தே பாதயுகம்
—த்யாந லக்ஷ்யம் மமாஸ்து தே பாதயுகம். 15

ஹ்ரீம்கார கல்ப மஹாத்ரும மஞ்சரி
ஹ்ரீங்கார துர்க்க பயோப்தி ஸுதே
ஹ்ரீம்கார கேஹ மஹாரத்ன தீபிகே
ஹ்ரீங்கார ஜாபேஸ்து மே ரஸனு ||
—தவஹரீங்காரஜாபேஸதுமே ரஸனு. 16

# தாய்மை

"மாத்ரு தேவோ பவ" என்பது உபநிடதக் கட்டளே. இதையே "பெற்ற தாயும் பிறந்த பொன்னுடும் நற்றவ வானினும் நனி சிறந்ததுவே" என்றும், 'அன்னேயும் பிதாவும் முன்னறி தெய்வம்', 'தாயினும் சிறந்த கோயிலுமில்லே, என்றும் பலவிதமாகக் கூறுகிறேம்.

தாய்தான் முதல் தெய்வம்: தாய் என்றுல் குழந்தையைப் பெற்றுல்தான் தாய் என்பது அல்ல. தாய்க்கு உரிய குணுதிசயங்கள் பொருந்திய எவருமே தாய்தான். அதனுல் தான் "தாயெலாம் அனேய ஓர் தந்தையே" என்று பரமேச்வரனேப் போற்றுகிறேம். அந்தக் குணங்கள் என்னவென்றுல் பூரணத் தூய்மை, தன்னலமில்லாமை, (பூரண) பூரணப் பொறுமை, பூரண மன்னிக்கும் சுபாவம், பூரணத் தியாகம், பூரண அன்பு, இவை எந்த இடத்தில் குடிகொண்டிருக்கிறதோ அங்கு "சக்தி தத்வம்"—தாய்மை முழுமையோடு விளங்குகிறது.

ஐந்து விதமான பக்தி வழிகள் வழக்கில் இருக்கின்றன. (1) தாயாக பாவித்து வழிபடுதல், (2) தோழனுக வழிபடுதல் (3) குழந்தையாக வழிபடுதல் (4) அடிமை (தாஸன்) யாக வழிபடுதல் (5) கணவனுக வழிபடுதல். எல்லாம் முடிவில்லா பரம்பொருளே அடைய வழியே ஆனுலும் தாயாக வழிபடுவதில் சுலபமாக இறைவனே நெருக்கத்துடன், உரிமையுடன் கொண்டாட முடிகிறது.

ஒரு கெட்ட பிள்ளே தோன்றக் கூடும். ஆனுல் ஒரு கெட்ட தாய் என்றுமே தோன்றியது கிடையாது.

"குபுத்ரோ ஜாயேத க்வசிதபி குமாதா ந பவதி" என்று சிறப்பாக தாய்மை தோத்திரம் செய்யப்படுகிறது. நீதி சாஸ்த்ரங்களில் தலேசிறந்த மனு தர்ம சாஸ்த்ரமும்,

உபாத் யாயன் தசாசார்யா
ஆசாயனும் சதம் பிதா
ஸஃஸ்ரந்து பித்ரன் மாதா
ஸெளரவேண த்ருச்யதே''

என்று கூறுகிறது.

[உபாத்தியாயனை விட 10 மடங்கு அதிகம் ஆசார்யன். ஆசார்யனை விட 100 மடங்கு பிதா அதிகம். பிதாவைவிட 1000 மடங்கு அதிகம் மதிப்புக்கும் மரியாதைக்கும் பெருமைக்கும் உரியவள் தாய்.]

சக்தியின்றி சிவன் சற்றும் அசையாது என்று ஆதி சங்கரர் ஸெளந்தர்யலஹரி முதல் ச்லோகத்திலேயே கூறுகிறார். நாம் கூட பலஹீனமானவனைப் பார்த்தால், 'என்ன சக்தியே இல்லாதவன் மாதிரி சோர்ந்து இருக்கிறான்' என்று கேட்கிறோம். இதிலிருந்து சக்தியானவள் இல்லாவிடில் எல்லாம் ஜடம் தான் என்பது தெரிகிறது. சக்தியையே யோகிகள் 'குண்டலினி' என்று கூறுகிறார்கள். தாய் இருந்தால்தான் பிள்ளை நன்றாக வளரும். இதனால்தான் மஹான்கள் எல்லோரும் தெய்வத்தை தாய் வடிவிலே கருணையோடு விளங்கும் ('பராசக்தி') ஜகன் மாதாவாக வணங்குகிறார்கள்.

''ஆப்ரும்ம கீட ஜனனீ''

அம்மா இன்றி உலகம் ஏது? அவள் புழு முதல் புவனம் படைக்கும் ப்ரும்மாவரை ஈன்று காத்து வருகிறாளே! (''ஆபரும்ம கீட ஜனனீ)'' அம்மா உயிருக்கு உயிர்! உயிருக்கு உருக் கொடுத்துப் படைத்து கருணையோடு ஜீவாதார சக்தியை அளித்து வளர்க்கிறாள். உலகின்கண் உள்ள உயிர் தொகைக்கு உணவளித்து வளர்க்கிறாள் அன்னை;நாம் ஸ்தூலமாகப் பார்க்கும் அம்மாவே கருணையோடு நம்மிடம் இருக்கிறாள், ஜகந்மாதாவும் கருணையோடு இருக்கிறாள் என்றால் எப்படி ஸாம்யம் பொருந்தும்; அதிக கருணையாக அல்லவா இருக்கவேண்டும், அவள்! அதனால்தான் தன்னை 'கருணாரஸ

ஸாஹரா' என்று சொல்லிக்கொள்கிருள் என்று தோன்று கிறது... அவள் நினைக்கிருள் : பக்தி உலகமும் நினைக்கிறது.

சாத்துக்குடி இருக்கிறதே (அது அம்மா என்ருல்) அது குழந்தைக்கு நல்லதுதான். ஆனல் அந்த சாத்துக்குடியை பல பழங்களைப் பிழிந்து, சக்கைப் பகுதியே, அசடே இல்லாமல் வடிகட்டி, எடுத்த துல்லியமான ரஸம் இருக்கிறதே அது பல மடங்கு உயர்ந்த சத்துள்ளது அல்லவா? அது மாதிரி சக்கை என்று ஒதுக்க முடியாத சாருக, ரஸமாக என்ருல், மதுரமாகவும் அளவில் சமுத்திரமாகவும் இருக்கிருள். ஒரு டம்ளர் என்ருல் ஆகிவிட்டதே என்று கவலைப் படவேண்டும். அவள்தான் சமுத்திரமாக இருக்கிருளே! அதனுல் அவள் எவ்வளவு அழகாக பெயரைப் பெற்றிருக்கிருள், பாருங்கள்: இந்தக் கருணை ரஸமாக அவள் இல்லாமல் இருந்தால் எந்த உயிராவது பிழைக்க முடியுமா? பாசமின்றி தாயைப் பார்த்தால் எப்படியிருக்கும்; அழிவுதான். அதனுல்தான் உயிர் தொகையிடம் உள்ள கருணையினுல் தன் பிரதிபலிப்பின் ஒரம்சமாக தெய்வ மகளிரைத் தோற்றுவித்து, அவர்களுக்கு உலகைத் தோற்றுவிக்கும் அச்சக்தியையும், தன் மாயையின் பலத்தையும், பாசத்தின் ஆழத்தையும் கருணையையும் கொடுத்தாள்.

மஹா ஞானிகளையே மோஹத்தில் பிரவஹிக்கச் செய்பவள் துர்க்கை. ''ஞானினுமபிசேதாம்ஸி 'தேவிபகவதிஹிஸா பலாத் ஆக்ருஷ்ய மோஹாய மஹா மாயாபிரயச்சதி'' என்று ஸப்தச்லோகி கூறுகிறது. அந்த மஹா மாயையை ஸ்தீரிகளிடம் தந்து பாசத்தையும் அளித்து கருணையையும் அளித்து தான்தான் பெண்ணுருவெல்லாம் என்று உணர்த்துகிருள்.

நாம் கோவிலில் கல்லைத்தானே ஸ்வாமி என்று கும்பிடுகிருேம். அதுபோல் தன் நினைவை உலகியலிலுள்ள மாந்தர் உணரும் பொருட்டு தாயாகி, தத்துவமான அவ்வளவு கருணை ரஸத்தையும் இந்தத் தாய்க்குத் தந்திருக்கிருள் அந்தத் தெய்வத் தாய்! அப்படி சாதாரண ஸ்திரீக்கே இவ்

வளவு மகிமை என்றால், அவளைப் படைத்த அவளை நினைந்து நினைந்து, உணர்ந்து உணர்ந்து, ஊற்றெடுக்கும் கண்ணீரால் உடம்பெல்லாம் நனைந்து நனைந்து, அகிலமும் தன்னிலும் தன்னை அகிலத்திலும் காணும் அந்தப் பரதேவதையின் பிரதிநிதியாக விளங்கும் தாய்க் குலத்தைப் பற்றி என்ன சொல்வது, என்ன எழுதுவது, பேசுவது?

உலகத்தாயே இவ்வளவு கருணையோடும் அன்போடும், பொறுமையோடும், சகிப்புத் தன்மையோடும், தியாக உணர்வோடும் இருப்பாளானால், அகிலாண்ட கோடியும் ஈன்ற அன்னை பராசக்தியை வர்ணனை செய்ய இயலுமா? அத்தகைய பராசக்தியை நாம் வழிபட எவ்வளவோ பாக்கியம் செய்தவர்கள் ஆவோம். நாம் செய்யும் தவறுகளை அன்னை ஒருத்தியே தான் மன்னிப்பாள். தந்தையாயிருந்தாலும் குருவாயிருந்தாலும் அல்லது வேறு எந்த உருவில் இருந்தாலும் நம் தவறுகளை மன்னிக்க மாட்டார்கள். இதனால்தான் சிவனைத் துதிக்கும் ஒரு இடத்தில்,

''அதி பீஷண கடுபாஷண யமகிங்கர படலீ
க்ருதகாடன பரிபீடன மாணுகம ஸமயே
உமயா ஸஹ, மம சேதஸி, யமசாசன நிவஸன்
சிவ சங்கர சிவ சங்கர ஹரமே ஹர துரிதம்''

என்று சொல்லப்படுகிறது.

['யமபடர்கள் படலம் படலமாக பயமுறுத்தி என்னை இழுத்துச் செல்லும்போது கருணையோடு கூடின என் தாய் உமையோடு நீ என் இதயத்தில் வந்து யமவாதனையின் கஷ்டங்களை நிவாரணம் செய்'' என்று பொருள்படுகிறது.] ஒரு சமயம் நீ என் பாவ காரியங்களையும், வாழ்க்கையில் நான் செய்த அநீதிகளையும், தெய்வ சிந்தனையற்று இருந்ததையும் நினைத்து எனக்குத் தகுந்த தண்டனை என்று அந்த பயங்கர யம கிங்கரர்களுடன் சேர்ந்துகொண்டு என்னைக் காப்பாற்றாமல் இருந்துவிடுவாய். ஆனால் என் தாய் என் குற்றங்களைப் பாராமல் குணத்தைக் கொண்டு, அப்படியே குற்றமேயிருப்பினும் தன் பிள்ளை என்ற வாஞ்சையால்

மன்னித்து கருணையோடும் அன்போடும் என்னைக் காப் பாற்றுவாள்]

இதையேதான் :—

''பொல்லாத பிள்ளையெனில் தாய் தள்ளல் நீதமோ புகலி டம் பிரிதுமுண்டோ!' என்று தாயுமானுரும் கூறுகிறுர்.

இந்தக் கருணைத் திருவுருவை, அன்பின் எல்லையை அரவணைப்பின் ஆழத்தை, மன்னிக்கும் மாண்பை பொறு மைச் சிகரத்தை, நிறைகடலை, தியாக மழையை ஒருங்கே திரட்டி உருக்கொடுத்து 'சக்தி' வழிபாடு என்று ஆதி சங்கர பகவத் பாதர் அமைத்துள்ளார்கள். அதுதான் 'சாக்தம்' என்று கூறப்படுகிறது.

யதா யதாஹி தர்மஸ்ய க்லானிர் பவதி பூதர
அத்புத்யானம் அதர்மஸ்ய ததாத்மானம், வேஷாம்யஹம்''

என்ற தேவீ மஹாத்மிய வர்ணனையை யொட்டி அந்த பர தத்துவமே பலவாக விரிந்து, பலவேறு உருவங்களாகவும் வகைகளாகவும் வழிபடப் பெறுகிறது.

---

*Documents Copying Same Size, any records.*
*Certificate, Sale deeds plans & designs,*
*written Matters or anything & everything*

UNDERTAKEN AND DELIVERED
PROMTLY- ORIGINALS RETURNED
IMMEDIATELY.

CONTACT :- Phone:- 31688

M/S. M. DOSS BROS.,
Photographers
14, Poonmalle High Road, Madras-600 003

**சக்தி**

எல்லா வழிபாட்டிற்கும் ஆதாரமாக விளங்குவது சக்தி வழிபாடு என்பது சிறப்பிற்குரியது. 'தன்னுடையது' என்ற எண்ணம், நெருங்கிய உணர்வு இந்த தாய்மைக்குத்தான் இருப்பதாலேயே தாய்நாடு, தாய் பாஷை என்று எல்லா வற்றிலும் 'தாய்' என்ற அன்பு மொழியை, அமுதச் சொல்லை இணைத்து இணைத்து உலகமெங்கிலும் வழங்கக் காண்கிறோம்.

தமிழ் மொழியில் 'அம்மா' என்றால் வியப்புக்குறியைக் குறிக்கும்; இவ்வளவு கருணையும் இதர பெருங் குணங்களும் உடையவளை வியக்காமல் எப்படி அழைப்பது என்று தானோ என்னவோ 'அம்மா' என்று கூறுகிறோம்.

இந்த பராம்பிகையான ஜகன்மாதாவை, துர்க்கை லக்ஷ்மி, சரஸ்வதி, ரூபங்களிலும் வழிபடுகிறோம். சகல (துரித) கஷ்ட நிவாரணம் பெற துர்க்காம்பிகை உபாஸனை ஐச்வர்ய கடாக்ஷத்திற்கு ஸ்ரீ மஹாலக்ஷ்மி உபாஸனை, வாக் விலாஸத்திற்கு ஸ்ரீ ஸரஸ்வதி உபாஸனை பயனளிக்கிறது. பராம்பிகையோ இம் மூன்று ஸ்வரூபமாகவும் திகழ் வதால் அவளை வழிபடுவோர்க்கு இம் மூன்றும் கிடைக்கிறது. **யாயா தத க்ஷாம் அதிகம் யதே ஸா பரா** '' என்று ச்ருதி கூறுகிறது. இந்த சக்தியை மஹா மந்திரங்களினால் **பாலா, பஞ்சதசாக்ஷரி, ஷோடசாக்ஷரி** என்று மூவகையாகப் பிரித்து உபாஸிக்கிறார்கள் சக்தி தாஸர்கள்;

**"உத்பத்திம்ச விநாசம்ச, பூதானும் ஆகதிம் கதிம்**
**வேத்தி வித்யாம் அவித்யாம் ச, ஸ, போச்யோ பகவானிதி"**

என்ற வசனம் உறுதி கூறுகிறது.

[பக: அஸ்யா: அஸ்தி இதி=பகவதி அதாவது பிராணிகள் உற்பத்தி; விநாசம், வந்தது, செல்லும் இடம், பந்த காரணம். மோக்ஷகாரணம் எல்லாம் அறிந்தவள் என்று பொருள்படும் பெயரால் அழைக்கப்படுவதும் பரா சக்தியேதான்:]

# பரம்பொருள்

சின்மயமான பரம்பொருள் (ப்ரஹ்மம்)எந்தச் சார்பும் இன்றித் தனியாக நிற்கிறது,—ஆநீத் அவாதம் ஸ்வதயா தத் ஏகம்: தஸ்மாத்ந பர: கிமச நாஸ—பரம் பொருள் சிருஷ்டி. ஸ்திதி, ஸம்ஹாரத்திற்கென இயற்றும் மாயையே சக்தி யென உருவெடுக்கின்றது. 'சக்த' என்ற சொல் திறமை, ஆற்றல் என்ற பொருள் அடிப்படையில் எழுந்ததாகும். இதன் தத்துவத்தை விளக்குவதே 'சாக்தம்'

நிர்க்குணமான பரம்பொருள் இந்த சக்தியால் ஸகுண மாக மாறுகிறது: நாம ரூபங்கள் தோன்றுகின்றன. ஆகவே பொருள் இல்லாப் பொருளின் விளைவில்லா விளைவே இந்த மஹாசக்தி, இவள் பெண் உருவினளாகவே போற்றப்படு கிறுள். சிருஷ்டியின் தொடக்கத்தில் பெண்மை இனம் ஒன்றே தோன்றியது. கவி காளிதாசன் இந்தப் பெண்ணி னத்தை 'சிருஷ்டி ஆத்யேவ தாது - சிருஷ்டியின் பழமையான மூலப்பொருள்—என வருணித்தார். பெண் ஜீவ கோசமே பலவாக பிரிந்த பின்னர் ஆண் இனம் உருவெடுத்தது. இன்றைய ஆராய்ச்சியாளரும் Gynaeco-Centric theorist என்று, இதனை ஆமோதிக்கின்றனர்.

எந்த தத்துவ உண்மைக்கும் பிறப்பிடமாவது வேதம். ரிக் வேதத்தில் இந்தச் சக்தியைப் பற்றிய வரலாறுகள் காணுவிடினும் தேவி ஸூக்தம் என்ற பகுதியில்— 'காண்பது, கேட்பது, மூச்செறிவது, உண்மையில் யாவும் என்னுடைய ஆற்றலால் நிகழ்கின்றன; இந்தப்பிரபஞ்சம் தோன்றும் பொழுது நான் காற்ருகி எப்பொருளிலும் ஊடு ருவி நிற்கின்றேன். எனது வல்லமை அளவிடற்கரிது. விண்ணையும் மண்ணையும் கடந்து செல்வது''—இவ்வாறு அன்னைபரமா பிரகிருதியே பாடியுள்ளாள். இவளையே 'வாக்' என்று வேதம் போற்றுகிறது. கேந உபநிஷத்தில் காணும் ஓர் வரலாறும் இந்த தேவி ஸூக்கத்தை அடிப் படையாகக் கொண்டதாகும்.

தேவாஸுரர்களுக்கிடையே மூண்ட பெரும் போரில் தேவர்கள் வெற்றி கண்டனர். நன்மை தீமை இவற்றிற்கிடையான போராட்டத்தையே இக்கதை உருவகப்படுத்துகிறதெனலாம். இந்தப் போருக்கு ஓர் இறுதியே இல்லை' இது ஊழிதோறும் நிகழ்வது. இறுதியில் ஸத்யமே—அதாவது நன்மையே—ஜயமடைகிறது. பொய்யாகிய (மித்யை) தீமை நாசமடைகிறது.

வெற்றியால் தேவர்கள் இறுமாந்திருந்த சமயம் அவர்கள் முன்பு ப்ரஹ்மம் தோன்றியது. அது யாரென விளங்கவில்லை தேவர்களுக்கு, அக்னி பகவானை அனுப்பி அதைப் பற்றி அறியமுயன்றனர். ப்ரஹ்மத்தின் முன் அக்னி தேவன் நின்றபோது, "யார் நீ? உனக்குள்ள ஆற்றல் என்னவோ?" என்று கேட்டது பரம்பொருள். "நான் ஜாதவேதஸ். (யாவும் உணர்ந்தவன்) எதனையும் எரித்துச் சாம்ப


ஜீவாம்ருதம்
ஆரோக்கியத்திற்கும்
பலத்திற்கும்
சியவன ப்ராஷ்
இருமலுக்கு
அருணா
ஸ்திரீகளின் ஆரோக்கியத்திற்கு
பால ப்ராஸ
குழந்தைகள் டானிக்
ரக்த சோதக
ரத்த விருத்திக்கு
1898 முதல் பிரசித்தி பெற்றது
ஆயுர்வேதாஸ்ரமம் (பி) லிமிடெட்

லாக்கக்கூடிய திறமை படைத்தவன் நான்'' என்றான் அக்னி.

''இதோ இந்தப் புல்லை எரித்துவிடு பார்ப்போம்'' என்றது ப்ரஹ்மம். எவ்வளவு முயன்றும் அக்னியால் அதனை எரிக்க முடியவில்லை.

பிறகு தேவர்கள் ப்ரஹ்மத்தை அறிய வாயு பகவானை ஏவினர். ''உனக்குள்ள வலிமை எத்தகையது?'' என்று பரம்பொருள் வினவ. ''எதையும் இழுத்துக்கொள்ளும் சக்தி எனக்குண்டு'' என்றான் வாயுதேவன்.

'இந்தப் புல்லைத் தூக்கு' என்றது ப்ரஹ்மம், காற்றினால் புல்லைப் புரட்டக்கூட முடியவில்லை! கடைசியாக தேவர் கோன் இந்திரனே வந்தான். அச்சமயம் விண்ணிடை நிகரிலா எழிலுடன் 'உமா'வான இமயச் செல்வி காட்சி தந்தாள். இந்திரன் அவ்வொளிவடிவினளை அணுகி ''தாயே! இவர் யார்'' என்று கேட்கவே ''இவர் பரமபுருஷன். இவரின்றி ஓர் அணுவும் அசையாது- ஆட்டுவித்தால் யார் ஒருவர் ஆடாதார்? இவரது ஆற்றலால்தான் நீங்கள் வெற்றி கண்டீர்கள்'' என்றாள் அன்னை பராசக்தி.

தேவர்களுக்கும் புரியாத அந்த குஹ்ய விஷயத்தை—ரஹசியத்தை—இந்த பரதேவதை குமாரி எங்ஙனம் அறிந்தாள்? இவள் அன்றோ ஆதிசக்தி, கடவுளின் மாயா பிரகிருதி! இவளே ஸ்ரீ துர்க்கா, உள்ளம் தனியே ஒலிக்காது; குழல் தனியே இசை புரியாது.. உள்ளம் குழலிலே ஒட்டாது; உள்ளம் மூச்சிலே ஒட்டும்; மூச்சு குழலில் ஒட்டும், குழல் பாடும்: இது சக்தியின் லீலை' என்று சக்தியை வழி பட்ட புலவன் பாரதி ஓர் அரிய உண்மையை விண்டுரைத்து விட்டான்.

''தாம் அக்னி வர்ணும் தபஸா ஜ்வலந்தீம்
வை ரோச நீம் கர்ம பலேஷு ஜுஷ்டாம்
துர்காம் தேவீம் சரணமஹம் ப்ரபத்யே
ஸுதரஸி தரஸே நம:''

அழல் போல் மேனியளும், தன் மாண்பினாலேயே ஒளிர்பவளும் செயல் உருவாவதற்குத் தொழப்படுபவளுமான துர்கா தேவியை நான் சரண் புகுகின்றேன். பிறவிக் கடலைக் கடக்க அவள் எனக்கு உறுதுணையாவாள்' என்று புகழ்கிறது நாராயண உபநிஷதம்.

மாயாம்து ப்ரக்ருதிம் வித்யாத் மாயிநம்து மஹேச்வரம்
தஸ்யாவயவ பூதை: து வ்யாப்தம் ஸர்வமிதம் ஜகத்

(இந்தச் சராசரம் யாவையும் உண்டு உமிழ்ந்தவளும், பரமனின் திருவிளையாடலால் தோன்றிய மாயாரூபிணியே இந்தச் சக்தியாவாள்.)

ஏவா ஸா ஸாக்ஷிணீ சக்தி சங்கரஸ்யாபி சங்கரீ
சிவாபிந: தயாஹிந: சிவஸாக்ஷாத் நிரார்த்தக

(இவளே பரம்பொருளுக்குச் சாக்ஷியாக விளங்குபவள். சங்கரனுக்கும் நன்மையை விளைவிப்பவள், அவனுடன் கூறு கொண்டவள்—இவள் இல்லாமல் சிவன் இல்லை.) என்று ஸூத ஸம்ஹிதை வருணிக்கின்றது.

ஸத்யஞானமயீ ஸாக்ஷாத் பரப்ரஹ்ம ஸ்வரூபிணீ
ப்ரஹ்ம விஷ்ணு மஹாதேவா அஸ்யா: புத்ரா: வராநநே
தஸ்யா: பதி பரஹ்மரூபி ஸ்வயம் ஸாக்ஷாத் ஸதாசிவ: ||
ஸைவ ஸாக்ஷாத் ஜகத்தாத்ரீ ஸைவ விச்வே ச்வரேச்வரீ

(ஸத்யம் ஞானம் இவற்றில் ஊடுருவியவள், பரப்ரஹ்மத்தின் எதிரொளியானவள். படைப்போனான ப்ரஹ்மா, காப்போனான விஷ்ணு, அழிப்போனான மஹாதேவன் இவர்கள் இவளுடைய மக்களாவர். இவளது கணவனே பரப்ரஹ்மமாகிய ஸாக்ஷாத் ஸதாசிவம். இவளே உலகத்தைத் தாங்குபவள், இவளே அகிலாண்டேச்வரி) என்று தக்ஷிணாமூர்த்தி ஸம்ஹிதை கூறுகிறது.

மஹா சண்டியும்,

ஸ்ருஷ்டி ஸ்திதி விநாசாநாம் சக்திபூதே ஸநாதநீ
குணாச்ரயே குணமயீ நாராயணீ நமோஸ்துதே.

(படைப்பு, காப்பு, அழிப்பு எனும் முத்தொழிலையும் பழமைதொட்டு இயக்கும் ஆற்றலுடையவள்; குணங்கள் நிரம்பியவள். நீரின் மென் சாயலள்; உனக்கு வணக்கம்) எனப் போற்றுகிறது.

**த்வம் சந்திரிகா சசிநி திக்மழிசௌ ருசி: த்வம்**
**த்வம் சேதநாஸி புருஷே பவநே பல த்வம்**
**த்வம் ஸ்வாதுதாஸி ஸலிலே சிகினி த்வம் உஷ்மா**
**நிஸ்ஸார மேதத் அகிலம் த்வந்ருதே யதிஸ்ய. த்**

(சந்திரனில் நிலா நீ; அருக்கனில் வெம்மையாவாய்; மனிதரில் நீ உணர்வாக நிற்பவள், காற்றினிலே நீ விசை; நீரிலே நீ சுவையாக நிற்பவள்—சுடரில் நீ ஒளியாக விளங்குபவள்—உன்னையன்றி இவ்வுலகு சாரமற்றதாகும்) என்று **ஸ்ரீ ஆதிசங்கரரின் வாக்கு** இவளுடைய தன்மைகளைக் கூறி வியக்கின்றது.

## சாக்த மந்த்ரம்

சக்தியின் வழிபாட்டை மந்த்ர சாஸ்திரங்கள் விரிவாகக் கூறுகின்றன. பிரபஞ்சத்தை இயக்கும் கண்காணுததோர் தெய்வீக ஆற்றலே சக்தியாக உருவகப்பட்டுள்ளது மனிதன் தன்னுள் உறங்கிக் கிடக்கும் சர்வ வல்லமையான ஆற்றலை எழுப்பிக்கொள்வதையே இந்த மந்திர சாஸ்திரம் விளக்குகிறது. உலக போகத்திற்காக இந்த சக்தியின் எழுச்சி விரும்பப்படுவதில்லை. யோகத்திற்கே இது உதவுகிறது—**நதுபுக்தயே—முக்தயே.**

இந்த சாக்த மந்த்ா சாஸ்திரங்களை மூன்று வகையாகப் பிரிக்கலாம்.

முதலாவது **கௌல மார்க்கம்**—இந்த தாந்த்ரிக வழி அறம் பொருள் இன்பம் வீடு எனும் நால்வகை புருஷார்த்தங்களை மனித இனம் அடைவதற்கென்றே வகுக்கப்பட்டதாகும். மனிதனின் நீச ஆசைகளைத் திருப்தி செய்யவும் இந்த இருள் வழி—இடதுசாரி மார்க்கம் (வாமாசாரம்)

முறைகளைக் காட்டுகின்றது. இவ் வகையான வாமாசார தந்திரங்கள் அறுபத்து நான்காகும். (சது: ஷஷ்டி தந்த்ராணி) இவை விநாசத்திற்கு ஒருவனை எளிதில்கொண்டு செல்லுவன. (விநாச ஹேது பூதாநி) வைதிக முறைமைக்கு முரணானது (வைதிக மார்க்க தூரவர்த்தி).

மஹா மாயா சம்பரம்: யோகிநீஜால சம்பரம்: தத்வ சம்பரம்: பைரவ தந்த்ரங்கள் எட்டு (ஸித்த பைரவம்—வடுக பைரவம்—கங்கால பைரவம்—கால பைரவம்—கலாமுக பைரவம்—யோகநீ பைரவம்—மஹா பைரவம்—சக்தி பைரவம்—இதனையே கபாலிகம் என்பர்).

பஹுரூப தந்த்ரம் எட்டு (சக்தியின் உருவங்களான ப்ராஹ்மீ—மாஹேச்வரி—கௌமாரீ வைஷ்ணவீ வாராஹீ—மாஹேந்த்ரீ—சாமுண்டா—சிவதூதீ—என்ற எட்டினைக் குறித்த உபாசனை முறை.)

யமால தந்த்ரம்—

சந்த்ர ஞானம்—மாலிநீ வித்யா—

மஹாஸம்மோஹன தந்த்ரம்—(நாக்கை அறுத்துக்கொண்டு உபாசித்தல்.)

வாமஜுஷ்ட மஹாதேவம் - (வாமாசார வழிகளில் ஒன்று; இகழப்படுவது)

வாதுல தந்த்ரம்—

ஹ்ருத்பதே தந்த்ரம் — (வாமாசாரத்தின் வகை, காபாலிகத்தின் ஒரு பேதமுமாகும்).

குஹ்ய தந்த்ரம்—(தீமையைச் செய்தும் மறைமுகமான வழிகளில் தேவதைகளை வசீகரணம் செய்வது).

கலாவாதம்—சந்திர கலையைப் பற்றி வாத்ஸ்யாயன காம நூலை அடிப்படையாகக் கொண்டு காமாசாரமாக வழிபடுவது.

கலாசாரம்—வாமாசாரத்தின் ஒருவகை.

குண்டிகாமதம்—குளிகைகளைச் செய்து மருந்து மூலம் வசீகரித்தல்.

மகோத்தாமதம்—ரசவாதம்.

வீணுக்ய தந்த்ரம்—வீணு எனும் யோகினியை வசியம் செய்வது.

த்ரோதலா தந்த்ரம்—மது வகைகளை உபயோகித்து அடையும் சித்தி.

த்ரோதலா தந்த்ரம்—64 யக்ஷிணிகளை வசியம் செய்யும் வித்தை.

பஞ்சாம்ருதம்—இது கபாலிகத்தின் ஒருவகை ஐம்பூத நிலையிலும் சாவின்மை எய்துதல்.

ரூபபேதாதிதந்த்ரம்—இதுவே திகம்பர மதம். க்ஷபணகர் ஜைனர் இவர்களது சாதனமுறை.

சந்த்ரகலா வித்யா எட்டு—ஸ்ரீ வித்யை பரமான தந்திர மார்க்கம் - சந்த்ரகலா - ஜ்யோத்ஸ்நாவதீ – குலார்ணவம் - குலேச்வரீ - புவனேச்வரீ - பார்ஹஸ்பத்யம் - துர்வாஸ மதம். இதை நான்கு வருணத்தவரும் அப்யஸிக்கலாம். அந்தணர்கள் ஸவ்யமாகவும், மற்ற வருணத்தவர் அபஸவ்ய மாகவும் இதனைப் பயிலுவர்.

சுபாகம தந்த்ரம் ஐந்து-வைதீக முறைகளுடன் ஒத்துப் போவன. வசிஷ்ட, ஸநக, சுக, ஸநந்தந, ஸநத் குமார ரிஷிகளால் விளக்கப்பட்டவை. இது ஸமயாசாரமென்று அழைக்கப்படுகிறது. பகவத்பாதாளும் இதனை ஏற்று உரையும் வகுத்துள்ளார் - கலப்புள்ள கௌல மார்க்கத்தை சங்கரர் விலக்கி விட்டார். (மிச்ரகம், கௌல மார்க்கம் பரித்யாஜ்யம் ஹி சாங்கரி) இது சக்ர வித்தையின் ஓர் அங்க மாக விளங்குகிறது.

ஸநந்த ஸம்ஹிதா - இதையே கைலாஸ ப்ரஸ்தாரம் என்கின்றனர். இதுவும் சக்ர வித்தையை விளக்குவது.

ஸநத்குமார ஸம்ஹிதா - இது பூப்ரஸ்தாரமென கூறப்படுகிறது. இதுவும் ஸ்ரீ வித்யையின் ஒரு பகுதியாகும்.

இரண்டாவது மிச்ரம் - அதாவது கர்மம் (செயல்) உபாசனை இவை இரண்டும் சேர்ந்தது. இவை மனிதனுள் அடங்கியுள்ள குண்டலினி சக்தியை எழுப்பும் ஆற்றலுடைய யோக சாதனைகள். இதில் பிரதீகை வழிபாடும் இடம் பெறுகிறது. இது தொடக்கத்தில்தான். இதில் எட்டு ஆகமங்கள் அடங்கியுள்ளன. (சந்த்ரகலா முதலியன).

மூன்ருவது மையமெனும் சாக்த சாஸ்திரங்கள் - இதன் குறிக்கோள் மோக்ஷமாகும். விஷய சபலத்திலிருந்து மனிதனை விடுதலை மார்க்கத்திற்கு இட்டுச் செல்வதாகும். தந்த்ர சாஸ்த்ரங்கள் யாவும் மோக்ஷத்தையே குறியாகக் கொண்டவை. பல ஞானிகள் தொன்மையிலேயே இதனைப் பின் பற்றி உயர்ந்து போயினர். ஜீவ ப்ரஹ்மத்தின் ஐக்கியமே இதன் முடிவு. ஸமய என்ற சொல் ஸஹ - மய. அவன் நானுதல் எனப் பொருள்படுவது. இதற்கு ஒருவகை சக்தி—ஆற்றல் - அவசியம்.

ஐந்து ஸமய ஆகமங்கள், வேதஉண்மையையே தத்தம் நோக்கிலிருந்து ஆராய்கின்றன. இந்த ஆகமங்களுக்கும் உபநிஷதங்களுக்கும் நெருங்கிய தொடர்பு இருப்பது நன்கு விளங்கும். பிரம்மம், ஸத்யம், இவ்வுலகம் மாயை (மித்யை: வெறும் பொயத் தோற்றம்) என்ற கருத்து அடிப்படையில் தான் இவை இயங்குகின்றன. உபநிஷதங்களைப்போல் ஸமய ஆகமங்களும் 25† தத்துவங்களை ஏற்றுள்ளது. இந்த ஸமய முறையான உபாசனையே ஸமயாசாரமெனப்படும்.

---

†25 தத்துவங்களாவன: 5 மஹாபூதங்கள் + 5 தன் மாத்திரைகள் + 5. கர்மேந்த்ரியம் + 5. ஞாநேந்த்ரியம் மன —மாயை மஹேசன்—சுத்தவித்யா—சதாசிவம்.

இந்தச் சக்தி அல்லது ஆற்றலைத்தான் ஸமயாசாரம் குண்டலிநீ என்கிறோம். இது மூலாதாரத்தில் அரவினைப் போல் படுத்துறங்குகிறது. இதனை எழுப்ப இரு வழிகள் :

**தபஸ்**—ப்ராணாயாமம் போன்ற மூச்சுயொடுக்கிச் செய்யும் முறை. யோக சாஸ்திரத்தின் பாலபடும்.

**மந்த்ரம்**—சில மந்த்ராக்ஷரங்களை பயிலுவோன் குறிப்பிட்ட நேரங்களில், குறிப்பிட்ட அளவில், குறிப்பிட்ட ஒலியில் சொல்வதனால், அவனுடைய மனத்துள் நிறுத்திய மூர்த்தித் தியானத்தைச் செய்வதால் சித்தி பெறுவது. இதில் முக்கியமானது **பஞ்சதசீ** எனும் மந்த்ர வர்ணங்கள். மனிதனின் உடலே இந்த ஸ்ரீ சக்ரமெனும் நகரத்தின் அமைப்புடையது. இது உயர்ந்தெழுவதால் **'மேரு'** என்ற பெயரையும் தாங்குகிறது.

ஆதியில் இந்த ஸ்ரீ வித்யையில் நாட்டம் செலுத்தி, நிறைபலன் கண்டவர்கள்—விஷ்ணு. சிவன் வானவரின் தலைவன், மநு, சந்திரன், குபேரன். லோபாமுத்ரை, அகஸ்தியர், ஸ்கந்தன், மன்மதன், ரௌஹிணேயன், தத்தாத்ரேயன், மாமுனி துர்வாஸர் ஆவர்.

நம் தமிழகத்தில், 5-ம் நூற்றாண்டில் **மூகாப்க சங்கரர்,** இந்த ஸ்ரீ வித்யையினால் நல்ல வாக்சாதுர்யத்தைப் பெற்று, காமாக்ஷியை ஐந்நூறு தேனெழுதும் பாக்களால் புகழ்ந்து பாடினார். அவர் பிறவி ஊமையாக இருந்தவர் (**முகாநாமபி குர்வதி ஸுரதுரீநிகாச வாக வைபவம்**).

பதினெட்டாம் நூற்றாண்டில் அபிராமிபட்டர், இந்த பராசக்தியின் கருணைகடாக்ஷத்தால் அமாவாசை இரவிலும் சந்த்ரோதயம் பார்த்த அற்புதம் யாவரும் அறிந்ததே. ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் தக்ஷிணேச்வரத்தில் இந்த ஜகதம்பிகையை வழிபட்டு, அடைந்த பேரின்ப சாதனைகளைப் பற்றியும் நாம் யாவரும் அறிவோம். சமீப காலத்தில் திரு அருணையில் திகழ்ந்த ஸ்ரீ சேஷாத்திரி ஸ்வாமிகள் காமாக்ஷியை வழிபட்டு ஸித்திகளெல்லாம் கைவரப்பெற்று ப்ருமமமாக உலவினார்.

உபாஸனை

தேவி உபாஸகர்கள் ஸ்ரீ சக்ரத்தையோ அல்லது மேரு வையோ பூஜாஸாதனமாக வைத்து வழிபட்டு வருகிறார்கள். ஸ்ரீ சக்ரத்தின் ஸ்வரூபத்தை ஸ்ரீ சங்கரர் ஸௌந்தர்ய லஹரியில் பிரகாசப்படுத்தியிருக்கிறார். 'சதுர்பி: ஸ்ரீ கண்டை; சிவயுவதிபி: பஞ்சபிரபி :'

அது மேரு ப்ரஸ்தாரம் என்றும், கைலாஸ ப்ரஸ்தார மென்றும், பூப்ரஸ்தாரம் என்றும் மந்திர பேதங்களுக்கு தக்கவாறு மூன்று வகையாகக் கூறப்படுகிறது.

1. ஷோடசாக்ஷரி என்ற 16 அக்ஷரங்களைக் கொண்ட மந்திரத்திற்கு—மேரு ப்ரஸ்தாரமென்றும்,

2. மாத்ருகா வர்ணக் கிரமத்தையொட்டி—கைலாஸ ப்ரஸ்தாரமென்றும்,

3. வசனீ முதலான தேவதா க்ரமத்தை அனுசரித்து—பூப்ரஸ்தாரமென்றும் வழக்கில் இருக்கிறது.

* * *

பரமன், பரையின் நிர்பந்தத்தால், ஸனக, ஸனந்தன, ஸனத்குமார, சுகப்பிரம்ம, வஸிஷ்ட என்ற ஐந்து ரிஷிகள் மூலம், 'சுபாகம தந்த்ர பஞ்சகம்' என்ற தேவியின் சாஸ்திரத்தை பிரகடனப்படுத்தினார். 'சுபாகம பஞ்சகம்' என்பது, 16 விதமானவை—1. மஹாத்ரிபுரஸுந்தரீ 2. காமேச்வரீ 3. பகமாலினி 4. நித்யக்லின்னா 5. பேருண்டா 6. வன்னி வாஸினி 7. மஹாவித்யேச்வரி 8. தூதி 9. த்வரிகா 10. குலஸுந்தரீ 11. நித்யா 12. நீலபதாகா 13. விஜயா 14, ஸர்வ மங்களா 15. ஜ்வாலாமாலினிகா 16. சித்ரா ஆகிய தேவதைகளைப் பற்றிய சாஸ்திரம். இந்த 16 வித தேவதைகளும் இரண்டு இரண்டு தேவதைகளாக கோணங்களில் ஸ்ரீ சக்ரத்தில் பூஜிக்கத் தகுந்தவர்களாக ஆகிறார்கள்.




கோவிலூர் ஆதீனம்
Acc-No: 846

இதற்கு ஸனந்தன ஸம்ஹிதா வசனம் கூறும் ப்ரமாணம் பின்வருமாறு :

"ஏதாஸ்து ஷோடச நித்யாயா : சந்த்ரகலாயா சக்ர வித்யாயா : அங்கபூதா : ॥

இந்த சாஸ்திர முறையையே ஸமயாசாரம் என்று சொல்வார்கள்.

கௌலமார்க்கம் என்னும் 64 விதமான தந்திரசாஸ்திரம் ஸ்ரீவித்யையைச் சார்ந்ததுதான் என்ருலும், வைதிகமான மதத்திற்கு விரோதமான மது, மாமிசம் முதலான உபயோகங்கள் இருக்கிறபடியால் கேவல ஸமயாசாரமே சிறந்தது என்ற அபிப்ராயம் ஸ்ரீ சங்கரர், பாஸ்கரராயர் போன்ற மஹான்களிடை நிலவியிருக்கிறது.

ஸ்ரீ வித்யையின் மூல (ப்ரதான) மந்திரமாக ஸ்ரீ ஷோடசாக்ஷரீ என்ற 16 பீஜஅக்ஷரங்களே உபாசனையில் இருந்து வருகிறது. பஞ்சதசாக்ஷரி என்ற 15 அக்ஷரங்களுடன் பரதேவதையின் பீஜாக்ஷரமாக 16வது அக்ஷரம் சேர்கிறது. இந்த 15 பீஜாக்ஷரங்களை சந்த்ரகண்டம், சூரிய கண்டம், அக்னிகண்டம் என்ற மூன்று கண்டங்களாகப் பிரித்துள்ளனர்.

"த்ரிகண்டோ மாத்ருகா மந்த்ர : ஸோம ஸூர்ய நலாத்மக :" என்கிறது சாஸ்திரம்.

1. (க, ஏ, ஈ, ல) ஹ்ரீம் : என்ற முதல் 4 பீஜாக்ஷரங்களும் அக்னிகண்டம்.

2. (ஹ, ஸ, க, ஹ, ல) ஹ்ரீம், என்ற இரண்டாவது ஐந்து பீஜாக்ஷரங்களும் ஸூர்ய கண்டம்.

3. (ஸ, க, ல) ஹ்ரீம் என்ற மூன்ருவது மூன்று பீஜாக்ஷரங்களும் சந்த்ர கண்டம்.

'ஹ்ரீம்' என்ற புவனேச்வரீ பீஜாக்ஷரம் ஒவ்வொரு கண்டத்தின் முடிவிலும் அடையாளமாக சேர்க்கப்படு

கிறது. இவைகளை 'க்ரந்திகள்' (முடிச்சுகள்) என்று கூறு வார்கள். அவை ருத்ரக்ரந்தி, விஷ்ணுக்ரந்தி, ப்ரம்மக்ரந்தி என்று கூறப்படுகின்றன. இந்த பஞ்சதசாக்ஷரி மந்த்ரம் கடைசியில் அம்ருத (சந்த்ர) கலை என்கிற பீஜாக்ஷரம் 16 வது ஸ்தானத்தை வகித்து ஸ்ரீ வித்யா ஷோடசாக்ஷரி ஆகி றது. [குரு முகமாகவே அறியவேண்டியபடியால் பிரகட னப்படுத்தவில்லை.]

**ஸ்ரீ நகரம்**

**16** கலைகளையுடைய சந்திரன் ஒவ்வொரு கலையாக வளர்ந்து பௌர்ணமியன்று பூர்த்தியாகிறது. பஞ்சதசீ உபதேசமானவர்கள் சுக்ல பக்ஷத்தை விசேஷமாகவும் 'ஷோடசீ' உபதேசம் பெற்றவர்கள் க்ருஷ்ண பக்ஷத்தை, விசேஷமாகவும் அந்தந்த மந்த்ர ஸித்திக்கு ப்ராதான்யம் கொடுக்கிறார்கள். கீழ்நோக்கிய 4 சிவ கோணங்களும்-மேல் நோக்கிய 5 சக்தி கோணங்களும் சேர்ந்து 44 கோணங்களை உடையதும், எட்டு தாமரை தளமும் 16 தாமரை தளமும், 3 வலயங்களும் 3 ரேகைகளும் கொண்ட ஸ்ரீ நகரத்தின் மத் தியில், பிந்து என்ற ஸ்தானத்தில் ஸ்ரீ பராம்பிகை யின் பாதாரவிந்தம் இருக்கிறது.

**பிந்து த்ரிகோண வஸுகோண தசார யுக்ம**
**மங்வச்ர நாகதல ஸம்யுத ஷோடசாரம்**
**வ்ருத்த த்ரயம் ச தரணீ ஸதந த்ரயம் ச**
**ஸ்ரீ சக்ர மேதத் உதிதம் பரதேவதாயா :**

**தேவீ மஹாத்மியம் : சண்டி—அல்லது—ஸப்தசதீ**

**தேவீ மஹாத்மியம்** மூன்று பாகங்களாக (முதல், இடை உத்தமம்) பிரிக்கப்பட்டுள்ளது. 1. மதுகைடபவதம், 2. மஹி ஷாசுரவதம், 3. சும்பநிசும்ப வதம்,

பிரயோக வகையான 700 மந்திரங்களடங்கிய ச்லோகங்களைக் கொண்டதால் 'ஸப்த சதீ' என்று சிதம்பர ஸம்ஹிதையும், என்றும் நிலையாய் உள்ள 7 விதமான நர்ம ரூபங்களுடையவளாகத் திகழ்வதால் 'ஸப்த சதீ' என்று மேரு தந்திரமும் கூறுகிறது. தேவதைகளின் ப்ரீதியைச் செய்யும் இம்மந்திர ஸ்லோகங்களினால் அவரவர் தமக்கு தேவையான ஆசைகளைப் பூர்த்தி செய்து கொள்கின்றனர். இந்த தேவீ மஹாத்மியம் ஜபிப்பதற்கு சில விதிகள் வகுத்துள்ளனர். ஸப்த சதீ மந்திரத்திற்குரிய தேவதை துர்க்கை.

துர்க்கையின் லக்ஷணங்கள் ஒன்பது ரூபமாக கவசத்தில் சொல்லப்படுகிறது 1. சைல புத்ரீ, 2. ப்ரஹ்ம சாரிணி, 3. சந்த்ர கண்டா, 4. கூஷ்மாண்டா, 5. ஸ்கந்த மாதா, 6. காத்யாயினி, 7. காலராத்ரீ. 8. மஹாகௌரீ, 9. ஸித்தி ப்ரதா—துர்க்கையின் உபாசனா கல்பத்ருமம் என்ற நூலில், ஜயா, விஜயா, பத்ரா, பத்ரகாளீ, ஸுமுகீ, துர்முகி, ப்ரக்ஞா, வ்யாக்ரமுகீ, ஸிம்ஹமுகீ, என்றும், வனதுர்க்கை, ஜலதுர்க்கை, வன்னிதுர்க்கை. ஸ்தூல துர்க்கை, விஷ்ணுதுர்க்கை, பிரஹ்ம துர்க்கை, ருத்ர துர்க்கை, மஹா துர்க்கை, சூலினி துர்க்கை என்றும் கூறப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு ஸ்வரூபத்திற்கும், அந்த லக்ஷணமுடைய மத்திரங்களும், த்யான ஸ்லோகங்களும், மந்திர மஹார்ணவம், மந்திர மஹோததி போன்ற நூல்களில் உள்ளன.

**ஸம்புட கரணம்—ஸம்போஜனம்—பல்லவம்**

ஒவ்வொரு உபாசகனும், தான் ஜபிக்கும் மந்திரங்களின் ஆரம்பத்திலும் முடிவிலும் இஷ்டவரத்தை அளிக்கும் சக்தி பீஜாக்ஷரங்களில் விரும்பியதற்குத் தகுந்தபடி சேர்த்துச் சொல்வது, அல்லது தேவி மஹாத்மியத்தில் சொல்லப்பட்ட ச்லோகங்களைச் சேர்த்துச் சொல்வது 'ஸம்புடம்' என்ற நியதிக்கு உட்பட்டது. ஆரம்பத்தில் சேர்த்துச் சொல்வது **பல்லவம்: முடிவில் சேர்த்துச் சொல்வது ஸம்போஜனம்.**

4. **பஞ்சதசாக்ஷரீ:** கஏஈல ஹ்ரீம் **வாக்பவகூடம்.**
ஹஸகஹல ஹ்ரீம் — **மத்யகூடம்.**
ஸகல ஹ்ரீம் — **சக்திகூடம்.**

5. **ஷோடசாக்ஷரீ:** தேவியின் மந்திரங்களிலேயே தலைசிறந்ததாகக் கருதப்படுகிறது ஷோடசாக்ஷரீ. "உயிரையே கொடுத்தாலும் ஷோடசாக்ஷரீ கொடுக்காதே" என்று பெருமை வகிக்கும் மந்திரம் இந்த பிஜாக்ஷரம். குரு பாத சேவை செய்து அறிந்து கொள்ளும்படி விட்டு விடப்படுகிறது.

**"வாக்பவ கூடைக ஸ்வரூப முக பங்கஜா**
**கண்டாத: கடி பர்யந்த மத்ய கூடஸ்வரூபிணி**
**சக்தி கூடைகதாபன்ன கட்யதோ பாக தாரிணி**
**மூல மந்த்ராத்மிகா மூலகூடத்ரய கலேபரா"**
**—லலிதா ஸஹஸ்ரநாமம்**

முதல் கூடமான ஆறு எழுத்துக்களும், சிரஸ் பாகம்,

இரண்டாவது கூடமான ஐந்து எழுத்துக்களும் கழுத்து முதல் இடை வரையுள்ள பாகம்

மூன்றாவது கூடமான நான்கு எழுத்துக்களும் இடையி லிருந்து பாதம் வரை உள்ளம் பாகம்.

பிண்டம்—அண்டம்

"அண்டத்திலுள்ளது பிண்டத்திலுள்ளது" என்பது ஆன்றோர் வாக்கு. இதுதான் வேதாந்தத்தின் ரகசியம். "தன்னை யாரென்றறிந்தால் பின் அறிய ஏதுமில்லை" இந்த தன்னை யாரென்றறியும் முயற்சி சுலபமாகத் தோன்றினாலும் கடினமான முயற்சியையுடைய காரியமாகிறது. அதிதீவிர நிலையடைந்த சாதகர்களுக்கே சாத்யமாகும் இது. எந்தப் பொருள் எங்கெங்கு எப்படி எப்படிப் பார்த்தாலும் அந்தப் பொருள், அந்த மெய்ப் பொருளே அஃதன்றி பிரிதொன்றில்லை என்பதுதான் சித்தாந்தம். திருவள்ளுவர்

அருளிய ''எப்பொருள் யார் யார் வாய் கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதறிவு''என்ற குறளின்கருத்தும் இதுதான் எவர் எதைச் சொன்னாலும் (உண்மையறிவு) மெய் ஞானம் உடையவன் எதிலும் மெய்ப்பொருளான பரப்பிரும்மத்தையே காண்பான்.

இதையே ஸ்ரீ சங்கரர் ஸௌந்தர்யலஹரியில்:

''மனஸ்தவம், வ்யோமத்வம், மருதஸி மருத்ஸராதிரஸி
த்வம் ஆப:, த்வம் பூமி: த்வயி பரிணதாயாம் நஹிபரம்
த்வமேவ ஸ்வாத்மானம் பரிணமயிதும் விச்வவபுஷா
சிதாநந்தகாரம் சிவயுவதி பாவேன பிப்ருஷே''

என்ற ஸ்லோகத்தில் கூறுகிறார்.

மூலாதாரம் முதல் ஆக்ஞாசக்ரம் வரை உள்ள ஆறு ஆதாரங்களும் அதன் அதி தேதைகளும் நீதான்! நீ இல்லாத வஸ்துவே இந்த உலகில் இல்லை. 'விச்வ வபுஷா' என்றபதத்தால் உலகில் உள்ள எல்லா சரீரங்களும் அடங்கி விட்டபடியால் தான் வேறு, தேவி வேறு என்ற பிரமைக்கு இடமில்லை தேவியோ உலகில் உள்ள அனைத்திலும் இருக்கிறாள் என்றால் உலகத்தில் இருக்கும் அனைத்தும் (நம்மிலும் தேவி இருப்பதால்) நம்மிடம் இருக்கின்றன என்றாகி விட்டது. ஆகவே, பிண்டத்திலே அண்டத்தில் உள்ளது எல்லாம் அடக்கம்! கண்டம் நமது சரீரம். அகண்டம்-தேவியின் வியாபகம் என்று தெரிந்தபடியால் புற வழிபாட்டில் உள்ளவர்கள் ''ஸமயாசாரம்'' என்ற ''அந்தர்முக'' வழிபாட்டிற்கு வரும்வரை வெளியில் உள்ள தீர்த்தம், மூர்த்தி, தலம் மூன்றையும் வழிபட வேண்டியவர்களாகிறார்கள். அவைகளில் பஞ்சபூத தத்வங்கள் அடங்கிய க்ஷேத்திரங்களாவன:

ஆக்ஞா—புருவ மத்தியில்—காசி—மனஸ் தத்வம்
விசுக்தி—கண்டத்தில்—சிதம்பரம்—ஆகாச தத்வம்
அனாஹதம்—ஹ்ருதயம்—காளஹஸ்தி—வாயு தத்வம்
மணிபூரகம்—நாபிஸ்தானம்—ஜம்புகேச்வரம்—ஜல தத்வம்

ஸ்வாதிஷ்டானம்—குதத்துக்கும் நாபிக்கும் நடுவே—
திருவண்ணமலை—அக்னி தத்வம்

மூலாதாரம்—குதஸ்தான—காஞ்சி பருத்வி - தத்வம்

இந்த ஆறு தத்வங்களும் கடந்த காரண, காரியம் அற்ற சமாதிநிலைத்தலமாக :

ஸஹஸ்ராரம்—சிரஸ்—மதுரை—நிஷ்கள பரமசிவம் என்று கூறப்படுகிறது.

'அந்தர்முக' உபாசனை செய்யும் தகுதியுடையவர்கள் ஸகல புண்ய தீர்த்தத்தையும் தலத்தையும் மூர்த்தியையும் தன் சரீரத்திலேயே கண்டுவிடுகிறார்கள்!

ஸ்ரீ சங்கரர், 'காசீ பஞ்சகம்' என்னும் ஸ்லோகத்தில்,

'காசி க்ஷேத்ரம் சரீரம் த்ரிபுவந ஜநநீ வ்யாபினி ஞான கங்கா............தேஹே ஸர்வம் மதியே யதி வஸதி புனஸ் தீர்த்தம் அன்யது கிம் அஸ்தி' என்று கூறுகிறார்.

அதனால்தான் தேவி உபாசகர்கள் தன்னைத் தேவியாகவே பாவித்து உபாசிக்கிறார்கள். இதனால் தாய்மைக்குரிய, பொறுமை சகிப்புத்தன்மை, அடக்கம் கருணை அவர்களுக்கு பூஷணமாகிறது. லலிதா தியான ஸ்லோகத்திலேயே ''அஹமித்யேவ பாவயே பவானீம்'' என்று கூறப்படுகிறது. ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரும் தன்னைப் பெண்ணாகவே பாவித்து உபாசித்ததைக் கேட்டுள்ளோம். இந்த பாவனையினால் 'நான், எனது' இரண்டும் அடங்க வழியாகிறது.

''யான் தான் எனும் இரண்டும் கெட்டாலொழிய தோன்றாது சத்தியம் '' என்று அருணகிரியும்,

''யான் எனது என்று அற்ற இடமே திருவடியாய்'' என குமரகுருபரரும் கூறுகின்றனர்.

நாம் தவறு செய்தால் நம்மை நாமே தண்டிக்கிறோமா, அல்லது தள்ளிவிடுகிறோமா? அதுபோல் பிறர் என்ற எண்

ணம் அல்லது தேவி என்ற பாவனை வந்த பிறகு தீவினைக்குக் காரணமில்லை—ஆகவே அங்கு காரியமுமில்லை.

நவாவரணங்கள :

தேஹம் என்ற கோட்டை 9 வாயில்கள் உடையது. இதன் மத்யஸ்தானமாகிய ஹ்ருதயப்ரதேசத்தில் பரமாத்மா 'கட்டை விரல் மாத்திரம்' இருப்பதாக சாஸ்திரம்—

''ஈச்வர ஸர்வ பூதானும் ஹ்ருத்தேசே அர்ஜுன திஷ்டதி'' என்று கிதாசாரியனான ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா கூறுகிறார். தோல், ரத்தம், சதை, மேதஸ், எலும்பு, மஜ்ஜா, சுக்லம், ப்ராணன், ஜீவன் என்ற ஒன்பதுமே 9 கோணங்களாக (சிவ கோணம் 4 சக்திகோணம் 5) பாவிக்கப்பட்டு பராசக்தி நடுவில் ஹ்ருதய தேசமாகிய பிரதேசத்தில் ஆட்சி செலுத்துகிறாள்!

ஆவ்ரண—என்றால் சூழப்பட்டது என்று அர்த்தம்.

''த்வக்ஸ்ருக் மாம்ஸ மேதோஸ்தி தாவத: சக்தி மூலகா
மஜ்ஜா சுக்ல ப்ராண ஜீவ தாதவ : சிவ மூலகா :
நவதா துரயம் தேஹ : நவயோநி ஸமுத்பவ :
தசமோ தாது ரேகைவ பராசக்தி : ததீச்வரீ:''





வெளியில் புறப்பூசனைக்கு வைக்கப்படும் யந்திரத்தில் ஒன்பது ஆவரணங்கள் இருக்கின்றன. அவையாவன:

1. த்ரைலோக்ய மோஹனம்
2. ஸர்வாசா பரிபூரகம்.
3. ஸர்வ ஸம்க்ஷோபணம்.
4. ஸர்வ ஸௌபாக்ய தாயகம்.
5. ஸர்வார்த்த ஸாதகம்.
6. ஸர்வ ரக்ஷாகரம்.
7. ஸர்வ ரோஹஹரம்.
8. ஸர்வ ஸித்தி ப்ரதம்.
9. ஸர்வாநந்த மயம்.

அந்தர்யாகம :

''பார்ப்பான் அகத்திலே பாற்பசு ஐந்துண்டு
மேய்ப்பாரும் இன்றி வெறித்துத் திரிவன
மேய்ப்பாரும் உண்டாகி வெறியும் அடங்கினல்
பார்ப்பான் பசு ஐந்தும் பாலாய் சொரியுமே'' —திருமூலர்

''அந்தர்யாக க்ரமாராத்யா'' என்ற நாமாவளி அம்பாளுக்கு உண்டு. வெறி கொண்டு திரியும் ஐம்புலன்களான பசுக்கள் கட்டுக்கடங்கினல்தான் அந்தர்யாகம், மானஸ பூஜா என்பது பூர்த்தியாகும்.

''மனஏவ மனுஷ்யாணும் காரணம் பந்தமோக்ஷயோ:''
(ச்ருதி)

''சித்தம் ஸஞ்சாயதே ஜந்ம ஜராமரண காரணம்''
''யஸ்ய ஸங்கல்ப நாசயஸ்யாத் தஸ்ய முக்தி: கரே ஸ்தித:''

என்று முக்திகோபநிஷத்தும், மண்டல ப்ராஹ்மணேபநிஷத்தும் கூறுகின்றன. ஆகவே, எவன் மனதை அலைய விடுகின்ருனே அவனுக்கு அந்த மனமே ஜநந மரணத்தை உண்டுபண்ணுகிறது. அதன் நிக்ரஹமே முக்தியளிக்கின்றது.

"அலையு மனத்தை யகத்தடக்கு மவனே
சரியை கடந்தோனும்
அலையு மனத்தை யகத்தடக்கு மவனே
கிரியை முடித்தோனும்
அலையு மனத்தை யகத்தடக்குமவனே யோகதற்பரனும்
அலையு மனத்தை யகத்தடக்குமவனே ஞானியதி சூரன்

"யஜதே புருஷோ யஜமான: புத்திம், பத்நீம், பரிக்ருஹ் யதாம் தீக்ஷாம் ஸந்தோஷம் தீந்திரியாணி யஜ்ஞுபாத்ராணி கர்மேந்திரியாண்யுபகரணுநி, ஸத்ரே சாரீரகே தத் தத் தேவதா ஏவ த்விஜஞுஸ்தடஸ்தா ஏவ யதாதேசம் பிரயஜமான மனுயஜந்தே" என்ற கர்ப்போபநிஷத் வாக்கிய பிரகாரம் தேகமே யாக சாலையாகவும், ஞானேந்திரியங்கள் யக்ஞு பாத்திரங்களாகவும், கர்மேந்திரியங்கள் உபகரணங்களாகவும், சுக துக்காதி சம திருஷ்டியே தீக்ஷையாகவும், அந்தந்த இந்திரியங்களின் தேவதைகளே ப்ராம்மணர்களா

Gram: 'COFITEA'

For Oxygen &
Acetylene Gases

**Lakshmi Agencies**

*Distributors for*

M/s. Madras Oxygen &
Acetylene Co., Ltd.,
353, Oppanakara Street,
COIMBATORE.

Phone: Office: 23028
Resi. : 24280

**Easwar Agencies**

Stockist for:

Godrej Soaps (P) Ltd.

கவும், ஜீவனே யஜமானுகவும், புத்தியே பத்னியாகவும் கோபம் யாகப் பசுவாகவும் இருக்கிறது.

ஜீவனுகப்பட்டவன், தனது புத்தியின் கூட்டுறவால், சுகம் துக்கம் என்பதை சமநோக்குடன் கண்டு, கோபத்தை பலி கொடுத்து கர்ம ஞானேந்திரியங்களை தனக்குச் சாதக மாக ஆக்கிக்கொண்டு தேஹத்தின் பயனுன 'ஜீவன் முக்த' நிலையையடைய வேண்டும்'' என்பதுதான் ''அந்தர் யாகம் என்று கூறப்படுகிறது.

இதை ஸ்ரீ சங்கரர் :

''ஜபோ ஜல்ப : சில்பம் ஸகல மபி முத்ரா விரசனு
கதி: ப்ராதக்ஷிண்ய க்ரமணம் அசனுத் ஆஹுதிவிதி :
ப்ரணு ம: ஸம்வேச: ஸுகமகிலம் ஆத்மார்ப்பண த்ருசா
ஸபர்யா பர்யா யஸ்தவ பவது யன்மே விலஸிதம :''

என்று ஆத்ம ஸாக்ஷாத்காராம் அடைந்த புருஷர் களின் நிலையை வர்ணிக்கிருர். அந்த முக்தர்கள் பேசுவது எல்லாம் ஜபம் : அங்க அசைவுகள் யாவும் தச முத்ரைகள்: நடப்பது பிரதக்ஷிணம் : ஆகாரம் உட்கொள்வது ஹோமம்: தூக்கமே சமாதி : எது செய்யினும் அது பராம்பிகையின் பாதாரவிந்தத்தில் லீனமாகும்.

• • •

## பூஜைகளில் சிறந்தது தேவி பூஜை

''தாயினும் சிறந்த கோயிலுமில்லை''. அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்'' என்று கூறும் முதுமொழி களில் உலக மார்க்கத்தில் கண்டாகாரமான சரீரத்துடன் இருக்கும் தாயையே முக்கியத்தும் கொடுத்து முதல் ஸ்தா னம் தருகின்றன எனில் அண்ட பேரண்டங்களையும் தனது உதரத்தில் தரித்த ''ஆப்ரம்ம கீட ஜனனீ''—அம்பிகையே!

"ப்ரம்மாண்ட பாண்டோதரீ" என்று ஸ்ரீ சங்கரரும் "அனைத்துயிரும் ஈன்ற பின்னையும் கன்னியென மறை பேசும் ஆனந்த ரூப மயிலே" எனத் தாயுமானவரும் ஏனைய மஹான்களால் வருணிக்கப்படும் ஜகத்துக்கு தாயுமான பரம கல்யாணிக்கு வழிபாட்டு முறைகளில் முதல் ஸ்தானம் கொடாமல் எப்படி இருக்க முடியும்?

இதையே ஸ்ரீ சங்கரர் ஸௌந்தர்யலஹரியில் "பவேத் பூஜை பூஜா தவ சரணயோர் யா விரசிதா" என்கிறார். தேவியின் பூஜைதான் பூஜையாகிறது என்பது இதனால் பிரசித்தமாகிறது.

ப்ரம்ம வித்யா ஸ்வரூபிணியின் பூஜைதான் தகராகாச உபாசனை. வித்யையில் சிறந்தது ஸ்ரீ வித்யை.

---




KUCHALAMBAL CHARITIES

*BANGALORE*

# கண்டறியாதன கண்டேன்!

''அம்மா!'' என்று கதறியது குழந்தை. குரல் எதிரொலித்ததே தவிர குழந்தைக்கு ஆறுதல் சொல்ல அங்கு பெற்றவள் வரவில்லை. ஏனெனில், அவள் அங்கு இல்லை: வீட்டில் இருந்தாள்! வீட்டிலிருந்து ஸ்நானம் செய்யவந்த தந்தையோடு அந்த நான்கு வயது தெய்வீகக் குழந்தையும் சேர்ந்து வந்தது. பால் மணம் மாறாத அப்பாலகனை குளக் கரையில் பத்திரமான ஓரிடத்தில் அமர்த்திவிட்டு, தந்தை நீராடச் சென்று விட்டார். நீரில் அவர் மூழ்கும் வரை வேடிக்கையாகப் பார்த்துக் கொண்டிருந்த குழந்தை, அவர் மூழ்கியதும் பயந்து கதறியது. தந்தையோடு வந்த குழந்தை: அப்பாவைக் காணவில்லை: ஆனால், அது 'அப்பா!' என்று அலறவில்லை! 'அம்மா!' என்றே குரல் கொடுத்தது. இதற்கும் ஒரு காரணம் இருக்கத்தானே வேண்டும்?

காரண காரியம் தெரியாத பச்சிளங் குழந்தைகளுக்கும் சரி, எல்லாம் தெரிந்த வயதானவர்களுக்கும் சரி, நல்லது கெட்டது இரண்டையும் சமமாகப் பாவித்து எந்த நிலையிலும் சேயைக் காப்பாற்ற ஓடி வருபவள் 'அம்மா' என்ற அன்னை; அன்னை என்ற தாய்; தாய் என்ற மாதா என்பது தெரியும். அம்மையில் அப்பன் அடங்கியுள்ள ரகசியம் இது!

அப்பாவைக் காணாது 'அம்மா' என்று அலறிய குழந்தைக்கு ஆறுதல் அளிக்க, பெற்ற தாயையும் பெற்றெடுத்த அன்னை பராசக்தி அங்கே தோன்றினாள்! அழுத குழந்தைக்கு ஞான அமுதூட்டினாள். அக்காட்சியைக் கண்டு இன்புற அம்மையோடு அப்பனும் அங்கே வந்திருந்தான். ஞானப்பால் உண்ட ஞான சம்பந்தர் ''அம்மையே அப்பா''...என்று சக்தி தத்துவத்தை மிகத் தெளிவாக உலகுக்கு விளக்கியருளினார்.

இது ஒரு கதை. அர்த்தநாரியான அம்மையப்பனை ஒருமுகப்படுத்தி வழிபடும் பக்தி உள்ளங்களுக்கு சக்தியின்றி சிவமில்லை, சிவமின்றி சக்தியில்லை என்ற கொள்கை

நிலைத்து நிற்கிறது. தனிப்பெரும் பண்போடும் மாண் போடும் பக்தி வழியில் செல்லும் தெய்வத் தமிழ் நாட்டில், இந்த சக்தி தத்துவத்தை பற்றி ஆயிரமாயிரம் ஆண்டு களுக்கு முன்பிருந்த அடியார்களும் மெய்ஞ்ஞானிகளும் அழகழகான சொற்சுவை, பொருட்சுவையோடு கூடிய பதிகங்கள் பல இயற்றியுள்ளதை நாம் அறிவோம். திருமந்திரத்தில்.

அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவதாரும் அறிவிலார்
அன்பே சிவமாவதாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந்தாரே !

என்று திருமூலர் வாக்கில் தாய் முதல் இடம் பெறுகிறாள். [அன்பு என்ற சொல்லுக்கு இங்கே தாய் என்று அர்த்தம் கொள்ளப்படுகிறது.]

இக்கருத்தை யொட்டியே மாணிக்கவாசகரும், அப்பனை அன்னையின் கருணையை உடையவனாகப் பின்வரும் பாடலில் குறிப்பிடுகிறார் :

∴ ∴ ∴

செம்மை நலம் அறியாத சிதடரொடும் திரிவேனை
மும்மை மலம் அறுவித்து முதலாய முதல்வன்றன்
நம்மை யுமோர் பொருளாக்கி நாய்சிவிகை ஏற்றுவித்த
அம்மை யெனக் கருளியவாறு யார் பெறுவார் அச்சோவே.

தண்டித்து மன்னிப்பவன் தந்தை. தண்டனையின்றி மன்னிப்பவள் தாய். நமது அன்றாட வாழ்க்கையில் நாம் ஒவ்வொருவரும் உணரும் ஓர் உண்மை இது.

இதிகாசங்களும், புராணங்களும் கிராமியக் கதை களும் இந்தத் தாய்மையின் சிறப்பை எடுத்துக்கூறத் தவறு வதே இல்லை, தாய்மீது குறை சொல்லும் தநயனை நாம்

கண்டதுமில்லை, கேட்டதுமில்லை. அற்பவாழ்வு, ஈனவாழ்வு நடத்தும் நிலையில் உள்ளவர்கள்கூட, தாயைப் புறக் கணிப்பதே யில்லை. அகம் புறம் இரண்டிலும் தனக்கும் மேற்பட்ட ஓர் இடத்தைத் தாய்க்குக் கொடுப்பதே ஜீவ ராசிகளின் பிறவித் தத்துவமாகும். இத்தகைய பெருமை யோடு கருணையே உருவெடுத்திருக்கும் தாய்க் குலத்தைத் தெய்வமெனப் போற்றி வழிபடும் நமது பாரத இந்து சமுதாயத்திற்கு தாய் வழிபாட்டு நெறி சாக்தம் ஒன்றை அமைத்துக் கொடுத்தருளியவர் **ஸ்ரீ சங்கர பகவத்பாதாள்.**

ஃ ஃ ஃ

மிக நெருங்கிய நண்பர் ஒருவர். ஸ்ரீ வாசஸ்பதி என்ற தேவி உபாசகர். கல்வி யறிவில் சிறந்தவர். சாஸ்திர ஞானம் மிக்கவர். யோக வாழ்க்கையில் நம்பிக்கையுள்ளவர். உபாசகர்களின் உள்ளத்தையும், பக்தர்களின் உள்ளத்தை யும், ஊடுருவிப் பார்த்து உண்மையை உணரக் கூடிய சக்தி பெற்றவர். நல்ல மனிதர்; நல்ல இருதயம் படைத்தவர். இந்த அரிய நடமாடும் ஜீவனோடு எனக்குத் தொடர்பு கிடைத்தது. அதுவே நான் 'கண்டறியாதன கண்ட' விஷய மாகும். அவரோடு நான் கொண்டிருந்த தொடர்பையும் நடத்திய உரையாடல்களையும் எழுதினாலே பாமர மனத் துக்கு சக்தி தத்துவத்தைப் பொறுத்த மட்டில் சிறிதளவே னும் ஒளி எற்படக் கூடும். வாசக அன்பர்களை அவரிடம் அழைத்துச் செல்லுகிறேன் :

ஃ ஃ ஃ

**நான்:**—ஆதிசங்கரர் அத்வைத தத்துவத்தைப் பிரகடனப் படுத்தினார்கள். அத்வைத கொள்கை ரீதியில் பார்த்தால், கடவுள் வழிபாடு மனித வாழ்வில் இடம் பெற நியாய மில்லை. இருந்தும் பேரறிஞரும் மகான்களும் ஆதி சங்கரர் பெயரைப் பயன்படுத்தி வழிபாட்டு முறை களைச் சொல்கிறார்களே, தங்கள் கருத்து என்ன?

வாசஸ்பதி:—பெரிய கேள்வி போட்டுவிட்டீர்கள். ஒரே வார்த்தையில் பதில் சொல்லி விடலாம். இருந்தாலும் இன்றைய நாட்டின் போக்கில் அந்த ஒரு வார்த்தை பதில் குழப்பத்தை விளைவிக்குமே தவிர நன்மையைச் செய்யாது. விரிவாக பதில் சொல்லுகிறேன். கேட்க அவகாசம் இருக்கிறதா உங்களுக்கு?

நான்:—இன்றையபொழுது பூராவையும் உங்களிடம் சமர்ப் பித்து விட்டேன். விரிவாகச் சொல்லிய பிறகு நீங்கள் குறிப்பிட்ட அந்த ஒரு சொல் பதிலையும் சொல்லி விடுங்கள்.

வா:— ஸ்ரீ ஆதிசங்கரரின் புனிதப் பெயரை அன்றாட பக்தி வழிபாட்டில் சம்பந்தப்படுத்திப் பேசுவது தவறுதான். இதற்கு எத்தனையோ காரணங்கள் கூறலாம், ஸ்ரீ சங்கர ரின் காலமே சர்ச்சைக்குரிய விஷயம். மூவாயிரம் ஆண்டுகள் என்று சிலர் ஸ்தாபிதம் செய்கின்றனர். 1300 ஆண்டுகளுக்கு முன்பு என சிலர் கூறுகின்றனர்; சிலர் மறுத்து கூறுகின்றனர். ஸ்ரீஆதிசங்கரரே இல்லை, அந்த உருவே ஒரு கற்பனை என வாதிப்போரும் உண்டு. இந்த நிலையில் அவர் இயற்றிய ஷண்மத ஸ்தாபனம் (அறுவகை வழிபாடு) என்று அநேகர் கூறுவதை எவ் வாறு ஏற்க முடியும்!

தத்துவரீதியில் மனித வாழ்வின் இயல்பை எடுத்துக் கூறி, 'காண்பதெல்லாம் மாயை' என்று வலியுறுத்திய அம்மகானை சம்பந்தப்படுத்தி தங்களது பொருளாதாரம் அபிவிருத்தியடையப் பயன்படுத்துவது வெகுசகஜமாகி விட்டது. நீங்கள், வெளியிடும் இப்பிரசுரங்கள் கூட 'ஆதிசங்கரர் ஷண்மதஸ்தாபனம்' என்றுதான் குறிப் பிட்டிருக்கிறீர்கள். தேவைக்குப் பொருள் தேடவும், தேவைக்கு மீறிய பொருள் சேர்க்கவும், பொருள் ஒன்றிலே மட்டும் தெய்வீகத்தைக் காண்பதும் மனித குலத்தின் முயற்சி. கொடி வளர கொம்பு அவசியமா

கிறது. பொருளாதாரச் சுழலில் சிக்கித் தவிக்கும் மனித இனம் பல்வேறு வழிகளில் தேடி அலைந்து பொருளீட்ட முயன்று வருகிறது. அத்திசைகளில் ஒன்றே பக்திதிசை! ஏனெனில், மனிதனைத் தன் வயமாக்குவது இந்த பக்தி திசை. இதைப் பயன்படுத்தி ஜீவனம் செய்வோர் பலர். உலகநிலை இவ்வாறு விபரீதமாக மாறி விட்டதால், அடித்துச் சொல்பவர்கள் வாதம் மேலோங்கி நிற்கிறது. ஸ்ரீ ஆதிசங்கரர் இன்றைய பொருளாதாரச் சுழலில் கொடிக்கு ஒரு கொம்பாக மாறிவிட்டிருக்கிறார். மிகவும் வருந்தத் தக்க விஷயம். நமது நாட்டின் சரித்திரமே சரிவர எழுதப்படவில்லை. உள்ளொன்று வைத்துப் புற மொன்று பேசுவோர் கையே மேலோங்கியுள்ளது.

இந்து மதம், அதை யொட்டிய தெய்வீகக் கொள்கைகள் யாவும் அவரவர் மனோ நிலைக்கேற்ப அவரவர் வயிறு வளர்க்க, குடும்பம் தழைக்க மாற்றி அமைக்கப்படுகிறது. செல்வாக்குள்ளவர்கள் இத்துறை யில் சிறந்து விளங்குகிறார்கள். 'செல்வோம்' என்ற செல்வம், அதிர்ஷ்ட வசமாக அவர்களுடைய தவறான செய்கைகளுக்கு உறுதுணையாய் நின்று விடுகிறது. ஸ்ரீ ஆதிசங்கரர் வகுத்துத் தந்த அத்வைத தத்துவத்தில் பூரண நம்பிக்கையுள்ளவர்கள் ஒருபோதும் அவர் பெய ரால் இன்று வழங்கிவரும் வழிமுறைகளை ஏற்கமாட் டார்கள்.

**நான்:**—ஸ்ரீ சங்கரர் நிலைபற்றித் தாங்கள் கூறியவற்றை நான் ஏற்றுக்கொள்கிறேன், இடையில் இத்தகைய பிரசுரங் களையும் தாங்கள் மறைமுகமாகக் கண்டனம் செய் தீர்கள். நான் கற்றறிந்த விசேஷ நூல்கள் பலவற்றி லும் ஸ்ரீ ஆதிசங்கரரின் 'ஷண்மதஸ்தாபனம்' பற்றி கூறப்பட்டிருக்கின்றன. கொம்பின் துணை கொண்டு வளரும் கொடி எல்லாமே சுயநலக் கொள்கையில் உள் ளன என்று தாங்கள் சொல்வதை நான் ஏற்கமுடியாது. பொருளீட்டும் நோக்கம், எல்லாம் துறந்த துறவி

